# திருப்புகழமிர்தம்



[redacted] ஆசிரியர் 

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை

யுதவு பரிமள மதுகர வெகுவித

வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

சௌமிய ஆவணி

# புதிய வெளியீடுகள்

**1. கட்டுரைக் கனிகள்**

பல ஆண்டுகளாக நமது திருப்புகழமிர்தத்தில் வெளிவந்துள்ள முக்கியமான 67 கட்டுரைகளின் தொகுப்பு. மிகவும் குறைந்த விலையில் வெளியிடப்பட்டுள்ளது. 420 பக்கங்கள் விலை ரூ. 3—00. பதிவு தபாற் செலவு ரூ. 1—10.

**2. கற்புக் கனிகள்—முதற் புத்தகம்**

கற்பு என்னும் தலைப்பின்கீழ் வெளிவந்த சிறுகதைகள் கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு 0—20.

**3. கற்புக் கனிகள்—இரண்டாம் புத்தகம்**

கற்புக் கதைகள் கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00.
தபாற் செலவு 0—20

## சந்தா நேயர்களுக்கு

திருப்புகழமிர்த இதழ்கள் ஒவ்வொரு ஆங்கில மாதமும் 16ந் தேதி (அன்று விடுமுறையானால் அடுத்துவரும் விடுமுறையில்லாத நாளில்) தபாலில் சேர்க்கப்படும். ஆகவே சந்தாத் தொகைகள் எந்தத் தேதியில் கிடைத்தாலும் அடுத்துவரும் 16ந் தேதி யளவில்தான் திருப்புகழமிர்த இதழ்கள் அனுப்பி வைக்கப்படும்.

பத்திரிகை எந்த மாதமாவது கிடைக்காவிட்டால் அந்த (ஆங்கில) மாதம் 25ந் தேதிவரை பொறுத்துப் பார்த்துவிட்டு அதற்குமேல் எமக்கு எழுதவேண்டும். அதற்கு முன் எழுதப்படும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. ஒரு மாதத்துக்கு மேற்பட்டுத் தெரிவிப்போர் கிரயம் செலுத்திப் பெறவேண்டும்.

பிரதிகள் மாதாமாதம் ஒழுங்காகக் கிடைக்கப்பெறாத அன்பர்கள் அந்தந்த வட்ட தபால் மேற்பார்வையாளர்களுக்குப் புகார் எழுதியனுப்பி ஒழுங்கு செய்து கொள்ள வேண்டும். இவ்விடம் தபாலில் சேர்ப்பது வரைதான் எமது பொறுப்பு. தபாலில் தவறும் பிரதிகளுக்கு நாம் பொறுப்பேற்க இயலாது.

பதிலை எதிர்பார்ப்போர் பதிலுக்கு உண்டான கார்டு அல்லது கவர், ஸ்டாம்பு இவைகளையும் சேர்த்தனுப்ப வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

## திருப்புகழமிர்தம் ஆண்டுச் சந்தா

| | |
|---|---|
| இந்தியா, இலங்கை | ரூ. 3—50 |
| மற்ற நாடுகள் | ரூ. 5—50 |

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்''

| மலர் 34 | சௌமிய ஞூ—ஆகஸ்ட் மீ<br>ஆவணி 1969 | இதழ் 5 |
|---|---|---|

## திருப்புகழ்

### திருவருணை

விரகொடு வளைசங் கடமது தருவெம்
பிணிகொடு விழிவெங் கனல்போல
வெறிகொடு சமனின் றுயிர்கொளு நெறியின்
றெனவிதி வழிவந் திடுபோதிற்
கரவட மதுபொங் கிடுமன மொடுமங்
கையருற வினர்கண் புனல்பாயுங்
கலகமும் வருமுன் குலவினை களையுங்
கழல்தொழு மியல்தந் தருள்வாயே
பரவிடு மவர்சிந் தையர்விட முமிழும்
படவர வணைகண் டுயில்மாலம்
பழமறை மொழிபங் கயனிமை யவர்தம்
பயமற விடமுண் டெருதேறி
அரவொடு மதியம் பொதிசடை மிசைகங்
கையுமுற அனலங் கையில்மேவ
அரிவையு மொருபங் கிடமுடை யவர்தங்
கருணையில் மருவும் பெருமாளே.

*1472—1*

## பதவுரை

பரவிடும் அவர் சிந்தையர்=தம்மைப் போற்றித் துதி செய்கின்ற அடியார்களின் உள்ளத்தில் உறைபவரும், விடம் உமிழும் படம்= நஞ்சைக் கக்குகின்ற படத்தையுடைய, அரவு அணை கண் துயில் மால்=பாம்புப் படுக்கையில் யோக நித்திரை செய்பவருமாகிய நாராயணரும், அம் பழமறை மொழி=அழகிய பழைய வேதத்தைச் சொல்லும், பங்கயன்=தாமரையில் இருக்கும் பிரமனும், இமையவர் தம்=தேவர்களும், பயம் அற=அச்சம் நீங்கி உய்யுமாறு, விடம் உண்டு=ஆலகால விடத்தையுண்டு,எருது ஏறி=விடையின் மீது ஏறி, அரவொடு=பாம்புடனே, மதியம் பொதிசடை=சந்திரன் சேர்ந் துள்ள சடையின் மீது, கங்கையும் உற=கங்கா நதியும் பொருந்த, அனல் அம் கையில் மேவ=நெருப்பு அழகிய கையில் விளங்க, அரிவையும் ஒருபங்கு இடம் உடையவர் தங்கு=பார்வதி தேவியை இடப்புறத்தில் கொண்டவராகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற, அருணையில் மருவும்=திருவண்ணமலையில் எழுந்தருளியுள்ள, பெரு மாளே=பெருமையிற் சிறந்தவரே! விரகொடு வளை=சாமர்த்தியத் துடன் சூழ்ந்து, சங்கடம் அது தரும்=துன்பத்தைத் தரக்கூடிய, வெம்பிணி கொடு=வெப்பம் நிறைந்த பாசக் கயிற்றைக் கொண்டு, விழிவெம் கனல்போல=கண்கள் வெய்ய நெருப்புப் போல, வெறி கொடு=கோபத்துடனே, சமன் நின்று=இயமன் என்முன் நின்று, உயிர் கொளும் நெறி இன்று என=உயிரைக் கொள்ள வேண்டிய முறை நாள் இன்று எனத் தேர்ந்து, விதிவழி வந்திடு போதில்= விதியின் ஏற்பாட்டின்படி வந்து சேரும் அந்த சமயத்தில், கரவடம் அது பொங்கிடு மனம்=வஞ்சகம் மிகுந்த மனத்துடனே, மங்கையர்= மாதர்கள், உறவினர்=சுற்றத்தார்கள், கண் புனல் பாயும்=கண் களில் அழுகை நீர் பாய்கின்ற, கலகமும் வருமுன்=குழப்பம் வரு வதற்கு முன்னரேயே, குலவினை களையும்=கூட்டமான வினைகளைக் களைகின்ற, கழல் தொழும் இயல் தந்து அருள்வாயே=உமது திருவடியைத் தொழுகின்ற ஒழுக்கத்தைத் தந்து அருள் புரிவீராக.

## பொழிப்புரை

போற்றித் துதிசெய்யும் அடியாரது சிந்தையில் உறை பவரும், நஞ்சைக் கக்கும் படத்துடன் கூடிய பாம்பணையில் அறிதுயில் புரிபவருமாகிய நாராயணர், அழகிய வேதங்களைச் சொல்லும் தாமரையில் வாழும் பிரமதேவன், தேவர்கள் இவர் களின் அச்சம் நீங்கும்படி ஆலகால விடத்தை உண்டு, இட பத்தின்மீது ஏறி, பாம்பையும் சந்திரனையும் சூடிய சடையின் மீது கங்கையும் பொருந்த, கையில் நெருப்பை ஏந்தி, இடப் பாகத்தில் உமாதேவியாரைக் கொண்ட சிவபெருமான் வீற்

றிருக்குந் திருவண்ணுமலேயில் எழுந்தருளிய பெருமிதமுடைய வரே! சாமர்த்தியமாகச் சூழ்ந்து துன்பத்தைத் தருகின்ற கொடிய பாசக்கயிற்றைக் கொண்டு, கண்கள் வெய்ய நெருப் புப் போல, கோபித்து, இயமன் என்முன் நின்று, உயிரைக் கொள்ள வேண்டிய முறைநாள் இன்றுதான் என்று தேர்ந்து விதியின் முறைப்படி வரும் அக்காலத்தில் வஞ்சனே மிகுந்த மனமுடைய மாதர்கள், சுற்றத்தார்கள் கண்களில் நீர் பொழி யக் குழப்பம் வருவதற்குமுன். வினேக் கூட்டத்தைத் தொலேக் கும் உமது திருவடியைத் தொழுகின்ற ஒழுக்கத்தைத் தந்து அருள்புரிவீராக.

## விரிவுரை

**விரகொடு வளே:—**

இயமன்—அல்லது அவனுடைய தூதர்கள் மிகுந்த சாமர்த்தியமாக வந்து வளேத்துக் கொள்வார்கள். தப்பித்துக் கொள்ளாதபடி சூழ்ந்து கொள்வார்கள்.

**சங்கடமது தருவெம்பிணி கொடு:—**

பிணி—பாசக்கயிறு.

யமன் கையில் உயிர்களேப் பற்றுகின்ற கயிறு இருக்கும். அது மிகுந்த துன்பத்தைத் தருவது.

**விழி வெங்கனல் போல:—**

ஆன்மாக்கள் பாவஞ் செய்ததனுல், கோபத்துடன் வரும் இயமனுடைய கண்கள் நெருப்பைப்போல் இருக்கும்.

**சமனின்று:—**

சமன்—யமன்.

பெரியோர் சிறியோர், கற்றவர் கல்லாதவர், அரசன், ஆண்டி, மணமகன், முதியோன் என்ற வேற்றுமை பாராமல் எல்லோரையும் ஆயுள் முடிந்தவுடன் ஒன்றுபோல். பார்ப் பதனுல் சமன் என்று பேர் பெற்ருன். சமமாகக் கருது கின்றவன்.

**உயிர்கொளு நெறியின்றென விதிவழி வந்திடு போதில்:—**

ஒவ்வொரு உயிருக்கும் பிறக்கும்போதே இறக்கும் நாள் இது என்று விதிக்கப்படுகின்றது. அதை மாற்ற யாருக்கும் அதிகாரம் கிடையாது. புகை வண்டியில் ஏறுமுன்னரேயே இறங்கும் நிலேயம் இது என்று உறுதிச்சீட்டுப் பெறுவதைக் காண்க. முன்னரே உறுதி செய்த விதிப்படி மரணம் வரும்.

அந்தக் காலத்தில் எல்லோரும் சுற்றி நின்று அழுவார்கள். இயமனுடன் வாதிட்டு உயிரை மீட்பார் ஒருவரும் இல்லை. மரண காலத்தில் துணை செய்வோர் யார் ?

"யாவரே இருந்தும் யாவரே வாழ்ந்தும்
யாவரே எமக்குற வாயும்
தேவரீரல்லால் திருவுளம் அறிய
திசைமுகம் எனக்கு வேறுளதோ" —பட்டினத்தார்.

**கரவட மதுபொங் கிடுமனமொ டுமங்கையர் உறவினர் கண் புனல் பாய:—**

ஒருவன் மரணப் படுக்கையில் தவிக்கும்போது அவனுடைய மனைவிமார்கள் எதனை எதனைத் தமக்குச் சொத்தாக எடுத்துக் கொள்ளலாம் என்ற வஞ்சனை மிகுந்த மனத்துடன் அழுவார்கள். உயர்ந்த அணிகலன்களையும் நாணயங்களையும் அப்புறப்படுத்துவார்கள். சுற்றத்தாரும் சுற்றி நின்று அழுவார்கள்.

**கலகமும் வருமுன்:—**

இத்தகைய குழப்பம் வருமுன் இறைவனுடைய திருவடியைத் தொழுது மரண பயத்தை மாற்றிக்கொள்ள வேண்டும்.

**குலவினை களையுங் கழல்:—**

குலம்—கூட்டம். வினையால் இந்த உடம்பு வருகின்றது. எடுத்த உடம்பால் இன்னும் பல பிறவி யெடுக்கக்கூடிய வினைகளைத் தேடிக் கொள்ளுகின்றோம்.

விதையால் மரம் முளைக்கின்றது. மரம் பல விதைகளை உண்டுபண்ணும் அது போல.

இப்படிப் பலகாலமாக வினைகளை யீட்டிப் பிறப்பதும் இறப்பதுமாக உயிர்களாகிய நாம் உழல்கின்றோம். பிறவிப் பெருஞ் சுழல் தொலையவேணுமானால் வினைத் தொகுதி தொலையவேண்டும். வினைகளைத் தொலைப்பது ஞானம். ஞானமாகிய நெருப்பில் வினைகளாகிய பஞ்சுகள் எரிந்து கரிந்து போம். இறைவனுடைய திருவடியே ஞானமாகும்.

"ஞானக் கழலோனே" —(துள்ளுமத) திருப்புகழ்.

வீரக் கழல் அணிந்திருப்பதனால் திருவடி ஆகுபெயராகக் கழல் எனப்பட்டது.

**கழல் தொழு மியல் தந்தருள்வாயே:—**

இறைவன் தொழுவார் துயர் களைபவன்.

"தனதடி வழிபடுமவர் இடர் கடிகணபதி" —சம்பந்தர்.

ஆதலால், "எம்பெருமானே! உமது திருவடியை இடையறுது தொழுகின்ற ஒழுக்கத்தைத்தந்து எளியேனுக்கு அருள் புரிவாய்", என்று அடிகளார் முருகனிடம் முறையிடுகின்ருர்.

**பரவிடுமவர் சிந்தையர்:—**

திருமால் தம்மை மறவாது துதிசெய்து வழிபடும் அடியார்களின் உள்ளத்தில் உறைபவர்.

"நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்" என்ற அப்பர் பெருமான் திருவாக்கை இது நினைவுறுத்துகின்றது.

**அரவணை கண்டுயில்மால்:—**

ஆதிசேடனுகிய சர்ப்பத்தின்மீது திருமால் அறிதுயில் புரிகின்ருர். இது யோக நித்திரை.

**அம் பழமறை மொழி பங்கயன்:—**

வேதம் அழகியது; பழமையானது. சுயம்பு. சிவபெருமான் கூறியது.

இத்தகைய வேதத்தைச் சதா பிரமதேவர் மொழிந்து கொண்டிருக்கின்ருர். தாமரையை ஆசனமாகக் கொண்டவர். அதனுல் பங்கயன் எனப் பெயர் பெற்ருர்.

**இமையவர் பயமற விட முண்டு—**

அமுதத்தை வேண்டித் தேவர்கள் பாற்கடல் கடைந்தார்கள். அக் கருமம் தொடங்கும்போது பிரணவப் பொருளாகிய விநாயகரை வழிபட்டார்களில்லை. ஆதலால் வாசுகி கக்கிய ஆலகாலவிடம் மிகப் பயங்கரமாகத் தோன்றியது. அதனைக் கண்டு திருமால் பிரமன் தேவர்கள் அனைவர்களும் அஞ்சியோடினுர்கள். கயிலைக்குச் சென்று சிவபெருமானை நாடினுர்கள். அப்பரமபதியின் புகழைப் பாடினுர்கள். அவர்களது அச்சத்தையகற்றி உய்விக்குமாறு சிவபெருமான் ஆலகால நஞ்சைக் கண்டத்தில் தரித்தருளினுர். இல்லையேல் அத்தனை பேரும் அன்றே மாண்டிருப்பார்கள்.

"மாலெங்கே ? வேதனுயர் வாழ்வெங்கே ? இந்திரன் செங்
கோலெங்கே ? வானோர் குடியெங்கே ?—கோலஞ் செய்
அண்டங்கள் எங்கே ? அவனியெங்கே ? எந்தை பிரான்
கண்டமங்கே நீலமுருக் கால். —திருவருட்பா.

**எருதேறி:—**

உலகமெல்லாம் அழிந்தபோது அறம் ஒன்று மட்டும் அழியாது எருது வடிவாகி சிவபெருமானை யடைந்தது. அத் தரும விடையின்மீது சிவபெருமான் ஏறியருளினுர்.

உலகங்களை யெல்லாம் தாங்குபவர் சிவபெருமான். அப் பெருமானையே தாங்குவது அறவடிவாகிய விடை.

**அரவொடு மதியம் பொதி சடை:—**

பெரியவர்கள், சிறியவர்களின் பகையை மாற்றி ஒற்றுமைப்படுத்துவார்கள். பாம்புக்கும் சந்திரனுக்குந் தீராப் பகை. அதனால் சந்திரனையும் பாம்பினையும் ஒற்றுமைப் படுத்தித் தமது தலையில் வைத்தருளினார். கங்கையைச் சூடியது தூய்மையையும் ஆற்றலையுங் குறிக்கின்றது.

''கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் சடைமேல் வைத்த
அங்கணர்'' —பெரிய புராணம்.

**அனலங்கையில் மேவ:—**

தாருகவனத்து முனிவர்கள் அபிசார வேள்வி செய்து ஏவிய அக்கினியைச் சிவபெருமான் திருக்கையில் ஏந்தினார். இது அவருடைய தூய்மையைக் குறிப்பது.

உலகத்தையெல்லாம் சுடுகின்ற தீ இறைவன் கையில் சந்தனம் போல் குளிர்ந்திருக்கின்றது.

### கருத்துரை

அருணைமேவும் அண்ணலே! மரணம் வருமுன் உன் சரணம் பரவ அருள் செய்.

## திருப்புகழ்

இடமடு சுறவை முடுகிய மகர
மெறிகட லிடையெழு திங்களாலே
இருவினை மகளிர் மருவிய தெருவி
லெரியென வருசிறு தென்றலாலே
தடநடு வுடைய கடிபடு கொடிய
சரம்விடு தறுகண நங்கனாலே
சரிவளை கழல மயல்கொளு மரிவை
தனிமல ரணையின லங்கலாமோ
வடகுல சயில நெடுவுட லசுரர்
மணிமுடி சிதறஎ றிந்தவேலா
மறமக ளமுத புளகித களப
வளரிள முலையம ணந்தமார்பா
அடலணி விகட மரகத மயிலி
லழகுட னருணையி னின்றகோவே
அருமறை விததி முறைமுறை பகரு
மரியர பிரமர்கள் தம்பிரானே.

## பதவுரை

வடகுல சயில=வடக்கேயுள்ள சிறந்த மேருமலை போன்ற, நெடு உடல் அசுரர்=நீண்ட உடலையுடைய அசுரர்களின், மணிமுடி சிதற=மணிமுடிகள் பொடியாகும்படி, எறிந்த வேலா=செலுத்திய வேலாயுதரே! மறமகள்=வேடர் மகளாம் வள்ளி நாயகியின், அமுத புளகித களப=அமுதமும் பூரிப்பும் சந்தனக் கலவையுமுடைய, வளர் இளமுலையை=வளர்ந்துள்ள இளங் கொங்கையை, மணந்த மார்பா=தழுவிய திருமார்பினரே! அடல் அணி=ஆற்றலும் அலங் காரமும் உடைய, விகட=அழகும் பூண்ட, மரகத மயிலில்=பச்சை நிற மயிலில், அழகு உடன் அருணையில்=அழகாகத் திருவண்ணுமலை யில், நின்ற கோவே=வீற்றிருக்குந் தலைவரே! அருமறை விததி= அரிய வேதங்களின் தொகுதி, முறை முறை பகரும்=முறை முறை யாக ஓதுகின்ற, அரி அர பிரமர்கள்=திருமால் உருத்திரன் பிரமன் ஆகிய மூவர்க்கும், தம்பிரானே=தனிப் பெருந் தலைவரே! இடம் அடு சுறவை=இடத்திலிருந்து வருத்தும் சுறு மீனை, முடுகிய மகரம்= விரட்டியடிக்கும் மகர மீன்கள் வாழ்வதும், எறிகடல் இடை எழு= அலை வீசுகின்றதும் ஆகிய கடலிடையே எழுகின்ற, திங்களாலே= சந்திரனாலும், இருவினை மகளிர் மருவிய தெருவில்=நல்வினை தீவினை யென்ற இரண்டிற்கும் ஏதுவான மாதர்கள் வாழும் தெருவில், எரி என வரு சிறு தென்றலாலே=நெருப்பைப்போல் வருகின்ற இளந் தென்றல் காற்றினாலும், தடம் நடு உடைய=குளத் தின் நடுவே இருப்பனவும், கடிபடு=நறுமணம் வீசுவனவும், கொடிய=கொடுமையுள்ளனவும் ஆன, சரம் விடும்=தாமரை நீலோற்பலம் ஆகிய மலர்க் கணைகளை விடுகின்ற, தறுகண் அனங் கனாலே=அஞ்சாத மன்மதனாலும், சரிவளை கழல=சரிகின்ற வளையல் கள் கழன்று விழுமாறு, மயல் கொளும் அரிவை=காதல் மயக்கத் தைக் கொள்ளும் இப்பெண், தனிமலர் அணையில்=தனியாக மலர்ப் படுக்கையில், நலங்கல் ஆமோ=நொந்து படுதல் தகுமோ?

## பொழிப்புரை

சிறந்த வட மேருமலையை யொத்த நீண்ட உடல்களை யுடைய அசுரர்களின் மணி மகுடங்கள் பொடியாகுமாறு செலுத்திய வேலாயுதரே! வேடர்குலப் பாவையாம் வள்ளி நாயகியின் அமுதமும் பூரிப்பும் சந்தனக்கலவையும் உடைய— வளர்கின்ற இளந்தனபாரங்களைத் தழுவிய திருமார்பினரே! வலிமையும் அழகும் அலங்காரமும் உடைய பச்சை மயிலின் மீது அழகாகத் திருவண்ணுமலையில் எழுந்தருளியுள்ள தலை வரே! அரிய வேதங்களின் தொகுதியை முறை முறையாக ஓதுகின்ற திருமால், உருத்திரன், பிரமன் என்ற மும்மூர்த்தி

கட்குந் தனிப் பெருந் தலைவரே! இடத்திலிருந்து வருத்தும் சுறுமீனை வெருட்டி யடிக்கும் மகரமீன்கள் வாழ்வதும், அலை வீசுவதுமான கடலில் எழுகின்ற சந்திரனுலும், நல்வினை தீவினை இரண்டுக்குங் காரணமான மாதர்கள் வாழும் தெரு வில் தீப்போல் வருகின்ற சிறிய தென்றல் காற்றினுலும், குளத்தின் நடுவில் வளர்ந்து நறுமணம் வீசுகின்ற தாமரை நீலோற்பலமாகிய மலர்க்கணைகளை விடுகின்ற அஞ்சாத மன் மதனுலும், வளையல்கள் கழன்று விழுமாறு, காதல் மயக்கத் தால் இந்தப் பெண் தனிமையான மலர்ப்படுக்கையில் நொந்து வருந்துதல் தகுமோ?

## விரிவுரை

இத்திருப்புகழ் அகப்பொருள் துறையில் அமைந்தது. கந்தவேளாகிய கணவனை யடையுமாறு ஆன்மா வருந்து கின்ற தன்மையை விளக்குகின்ருர் அடிகளார்.

**இடமடு சுறவை முடுகிய மகர மெறிகடலிடை யெழு திங்களாலே:—**

தன் இடத்தில் இருந்து துன்பஞ்செய்கின்ற சுறுமீன் களை ஆற்றலுடன் விரட்டியடிக்கின்ற மகர மீன்கள் வாழ் கின்ற கடல்.

இதனுல் பிறரைத் துன்புறுத்துகின்றவர் வாழும் கடல். ஆதலால், கடலில் எழும் சந்திரனும் இப்பெண்மணியைத் துன்புறுத்துகின்ருன் என்ற குறிப்பு தோன்றுகிறது.

தனித்திருக்கின்ற காதலன் காதலிக்கு சந்திரன் வெப்ப மாக வேதனையைத் தருவான்.

"வாரி மீதே யெழு திங்களாலே" —திருப்புகழ்.

**இருவினை மகளிர் மருவிய தெருவில் எரியென வருசிறு தென்றலாலே:—**

பெண்களால் நல்வினையும் எய்தும், தீவினையும் எய்தும். இன்பமும் வரும் துன்பமும் வரும். ஆகவே இருவினைக் குங் காரணம் பெண்கள் என்ருர்.

இத்தகைய பெண்கள் வாழுந்தெருவில் நெருப்பைப் போல வருகின்ற இளந்தென்றல் காற்றினுல் இவள் வருந்து கின்ருள்.

எல்லோருக்கும் இன்பத்தைத் தருகின்ற தென்றல் காற்று, காதல் வயப்பட்டோர்க்குத் துன்பத்தைத் தரும்.

எல்லோர்க்கும் நன்மை செய்கின்ற மழை உப்பளம் வியா பாரிக்கும், செங்கல் சுடுகின்ற வியாபாரிக்கும் துன்பத்தைத் தருவது போல் என வுணர்க.

**தடநடுவுடைய கடிபடு கொடிய சரம்:—**

குளத்தின் நடுவில் மலர்ந்து வாசனை வீசும் இனிய தாமரை நீலோற்பலம் என்ற மலர்கள் காமனுடைய கணை களாம்.

**தறுகண் அனங்கனாலே :—**

தறுகண்—அஞ்சாமை. மன்மதன் எவர்க்கும் அஞ்சா தவன். காசிபர், விசுவாமித்திரர் முதலிய மாமுனிவர்கள் மீதும் மலர்க்கணை யேவி மயக்கியவன்.

அனங்கன்—உடம்பில்லாதவன். சிவபெருமான் கனற் கண்ணால் எரிந்தான். இரதி வேண்ட, அவனை அவளுக்கு மட்டும அங்கனாகவும், ஏனையோர்க்கு அநங்கனாகவும் இருக்கு மாறு சிவபெருமான் கருணைபுரிந்தருளினார்.

**சரிவளை கழல :—**

கணவனைப் பிரிந்த துன்பத்தால் உடம்பு இளைத்து வளை யல்கள் கழன்று விடுகின்றன.

"சங்காட்டடங் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே" என்கின்றார் திருஞானசம்பந்தர்.

**மயல் கொளுமரிவை:—**

முருகன்மீது காதல் கொண்ட பெண்.

**தனிமல ரணையி னலங்கலாமோ:—**

முருகனும் காதலியும் சேர்ந்து மகிழும் மலர்ச்சயனத்தில் இப்பெண்மட்டுங் தனிமையில் படுத்துத் துயரம் உறு கின்றாள்.

"இவ்வாறு துயரப்படுகின்ற இப்பெண்மணியின் தனி மையை நீக்கி முருகா! நீ இவளுக்கு அருள் செய்" என்று அடி களார் முறையிடுகின்றார்.

**வட குலசயில நெடுவுடல்:—**

அசுரர்கள் வடமேருகிரியைப் போல் நீண்டு பருத்த உடம்பை யுடையவர்கள்.

**மறமகள் அமுத புளகித களப வளரிள முலையை மணந்த மார்பா :—**

வள்ளிநாயகி இச்சாசக்தி. அப்பிராட்டியார்பால் வளர் கின்ற அபரஞானம் பரஞானம் என்ற இருதனங்களையும் ஞான பண்டிதன் தழுவுகின்றான் என வுணர்க.

**அடலணி விகட மரகத மயில்:—**

அடியாரது அச்சத்தை யகற்றும் ஆற்றலும் அலங்கார மும் அழகும் உடையது மயில். இது விந்து தத்துவம், ஓங்

உ
முருகா

# கற்பு

---

## சிவந்தி

சென்னையில் செல்வச் சீமானாக வாழ்ந்த செல்வகேசவ முதலியாருடைய ஒரே புதல்வி சிவந்தி. பெரிய பங்களாவில் செல்வமாகப் பிறந்து செல்வமாக வளர்ந்தாள். தாய்களிக்கத் தமர்களிக்க உற்ரும் மற்ருரும் மகிழ அவள் பள்ளிக்கு அனுப்பி வைக்கப்பட்டாள். வகுப்பில் முதன்மை வகித்து தேர்ச்சி பெற்று வந்தாள். கூரிய அறிவும் சீரிய அழகும் படைத்திருந்தாள்.

அவளுடைய தாய்மாமன் வீரராகவ முதலியார் களத்தூரில் நிலபுலங்கள் உடையவராய் வாழ்ந்தார். சிவந்தி லீவு நாளில் அங்கு போய் தங்குவாள். தோப்பிலும் வயல்புறங்களிலும் ஓடியாடி விளையாடுவாள். வீரராகவ முதலியாருக்கு ஒரே மகன் செங்கல்வராயன். செந்நெலும் கன்னலும் விளைகின்ற களத்தூர் நல்ல வளமையான ஊர். சோலைகள் சூழ்ந்து பசுமையாகக் காட்சியளிக்கும். சிவந்திக்கு ஓய்வு நாட்களாகிய இரண்டு மாதங்களும் இரண்டு நாட்களாகக் கழியும்.

சிவந்தி எல்லா வகுப்புக்களிலும் தோல்வி காணுது வெற்றி பெற்ருள். B. Sc., படித்து வந்தாள். ஒரு நாள் பள்ளிக்கூட வாசலில் நடந்தபோது வாழைப்பழத் தோலை மிதித்து வழுக்கி விழுந்தாள். சுகந்தன் என்ற மாணவன் ஓடி வந்து அவளைத் தூக்கினுன். அவள் நாணத்துடன் அவனைக் கடைக்கண்ணுல் குறுக்கே பார்த்து நன்றி கூறினுள். அது முதல் சுகந்தனிடம் அவளுக்கு ஒருவிதமான உணர்ச்சியும் அன்பும் ஏற்பட்டன. இருவரும் தனிமையில் இனிமையாக உரையாடி உவகையுறுவார்கள். நாள் செல்லச் செல்ல அவர்களிடம் நட்பு முறுகி வளர்ந்தது.

---

காரம். ஓங்காரத்தின்மீது ஞான ஒளிமயமாகக் கந்தவேள் காட்சிதருகின்ருர்.

அருமறை விததி முறை முறை பகரு மரியர பிரமர்கள் தம்பிரானே:—

ஆயிரம் வேதங்களையும் முறைமுறையாக ஓதுகின்ற அயன் அரி அரன் என்ற திரிமூர்த்திகட்கும் குருமூர்த்தியாக விளங்குந் தனிப்பெருந் தலைவர் முருகர்.

### கருத்துரை

அருணுபுரிமேவிய ஆண்டவனே! உன்னை விரும்பும் இப்பெண்மணியை யாண்டருள்.

ஞாயிறு அன்று மாலை இருவரும் கடற்கரைக்குச் சென்றார்கள். நீலக்கடலின் முன் அமர்ந்து உலகையே மறந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

''ஏனுங்க படிப்பு முடிந்தவுடன் நீங்கள் கல்யாணம் பண்ணிக் கொண்டா என்னை மறந்து விடுவீர்களா'' என்றாள் சிவந்தி.

''சிவந்தி! உனக்கும் எனக்கும் ஒரே தேதியில் ஒரே இடத்தில் ஒரே பந்தலில் கல்யாணம் ஆனால் எப்படி மறக்க முடியும்?''

''ஆ...நீங்களும் அப்படித்தான் முடிவு செய்திருக்கின்றீர்களா? ரொம்ப நல்லது. அப்படியானால் நம்ம வாழ்வு இமயம்போல் உயர்ந்தும் குளிர்ந்தும் விளங்கும். இதற்கு உங்க அப்பா அம்மா ஒத்துக்குவாங்களா?''...

''சிவந்தி! எங்கப்பா ஊரில் தையல் வேலை செய்பவர். அவருக்கு ஒன்றுமே தெரியாது. உலகந் தெரியாதவர். ஏதோ முன்னோர்கள் தேடிய நிலங்களைச் சிறிது சிறிதாக விற்று எனக்குப் பணம் அனுப்புகின்றார். அதனால் எல்லாம் என் இஷ்டந்தான். நான் கிழித்த கோட்டைத் தாண்ட ஆள் கிடையாது''

''உங்கள் சொல் பழம் நழுவிப் பாலில் விழுந்தாப்போல் இருக்கின்றது. நம்ம வாழ்வில் இன்பத் தேன் பாயும். காதல் தென்றல் வீசும். உவகை மணம் மணக்கும். நாம் ஈருடம்பும் ஒருயிருமாக வாழலாம்'' என்று கூறி அவன் மீது சாய்ந்தாள் சிவந்தி.

''என் அன்புக் குவியலே! என்னை மணந்து கொள்ள உன் அம்மா அப்பா உடன்படுவார்களா? நீ உயர் குலத்துப் பெண். செல்வச் சீமாட்டி. குலமும் செல்வமும் குறுக்கே வைத்த சுவறுகளாகத் தடுக்குமே?''

''என் இதய வேந்தே! அந்தச் சுவறுகளை என் வீர உறுதிக் கடப்பாறையால் உடைத்து எறிவேன். என் சொல்லை என் அப்பா இதுவரை தட்டியதில்லை. எல்லாம் என் விருப்பம்போல் நடந்து வருகின்றார். இதிலும் என் விருப்பத்தைத் தடுக்க மாட்டார். நீங்கள் அதுபற்றிக் கவலைப்பட வேண்டாம். பெருக்கெடுத்து ஓடி வருகின்ற வெள்ளத்தை உப்பு மூட்டை தடை செய்யாதுதானே''

இருண்டுவிட்டது. அவர்கள் உள்ளத்திலும் ஆசாபாசமாக இருண்டு விட்டது. ஒருவரையொருவர் கைபிடித்துக் குலுக்கிக் கொண்டு பிரிந்தார்கள். இப்படி சிவந்தியின் கல்லூரி வாழ்க்கை மாசுபட நடைபெற்றது.

நேரங்கழித்து வந்த புதல்வியைப் பார்த்து செல்வகேசவ முதலியார், ''ஏனம்மா இவ்வளவு நேரம்? எங்கு போயிருந்தாய்?'' என்று அன்பு ஒழுகக் கேட்டார்.

''அப்பா! என் சினேகிதை கோமளம் வீட்டுக்குப் போயிருந்தேன்'' என்று வாய்கூசாமல் பொய் சொன்னாள்.

..............................................................

..............................................................

மங்களம்மாள் தன் கணவனுரிடம் "நாளைக்கு எங்கண்ணு களத்தூரிலிருந்து வருகின்ருராம். இந்த வருஷம் கல்யாணம் செய்துவிட வேண்டும் என்று நினைக்கின்ருர். செங்கல்வராயனுக்கு வயது ஆகின்றதுதானே. நம்ம பெண்ணுக்கும் 19 வயதாகிவிட்டது. காலத்தில் கல்யாணம் பண்ணுவது நல்லது. அண்ணு வந்தவுடன் நல்ல சோதிடருடன் ஆராய்ந்து ஆவணி மாதத்தில் கல்யாணம் செய்து விடுங்கள்" என்ருள். செல்வகேசவ முதலியார். "அப்படியே செய்வோம். ஈசன் கருணையுந் துணை செய்ய வேண்டும்" என்ருர்.

இந்த உரையாடலை அடுத்த அறையிலிருந்து உற்றுக்கேட்ட சிவந்திக்கு முகம் சிவந்து விட்டது. பட்டிக்காட்டு மாப்பிள்ளையா எனக்கு? பட்டம் பெற்ற மாப்பிள்ளையையல்லவா நான் காதலித்துள்ளேன். இதனை எப்படி அப்பாவிடம் தெரிவிப்பது" என்று எண்ணித் திகைத்தாள்.

மெல்ல அவர்கள் பேசிக் கொண்டிருந்த அறைக்குச் சென்று, "அப்பா! இப்போது என்ன கல்யாணத்துக்கு அவசரம்? நான் இப்போது எதற்கும் உடன்பட மாட்டேன். நீங்க ஒண்ணும் கல்யாண முயற்சி செய்ய வேண்டாம்" என்ருள்.

செல்வகேசவ முதலியார் மகளுடைய தலைமயிரைக் கோதிவிட்டு "கண்ணே! உன்னைப் பெற்றெடுத்த நாங்கள் உனக்கு உரிய காலத்தில் திருமணம் செய்து வைக்க வேண்டும். நீ சிறு பெண். உலகந் தெரியாது. நாளைக்கு உங்க மாமா வருகின்ருர். உனக்குக் காலத்தில் கல்யாணமாக வேணும். அவருக்கு ஒரே பிள்ளை செங்கல்வராயன். உத்தமமான பையன். தாய் தந்தையரைத் தெய்வமாக நினைப்பவன். தன் ஒரு மகனுக்கு உரிய காலத்தில் அரிய திருமணஞ் செய்ய அவர் திட்டம் இட்டிருக்கின்ருர். அதற்கு நாம் இசைய வேண்டாமா?"

சிவந்தி "அப்பா! அவர் வேறு எங்காவது பெண் பார்த்துத் தன் மகனுக்குக் கல்யாணஞ் செய்துக் கொள்ளட்டும். அதற்காக நீர் ஏன் கவலைப்படுகின்றீர்?"

இந்த வார்த்தை முதலியாருக்கு அதிர்ச்சியை உண்டாக்கியது. தன் மகளா இப்படிப் பேசுவது? என்று எண்ணி அவளை ஒருமுறை மேலும் கீழும் பார்த்தார். அவருடைய பார்வை சிவந்தியைச் சுட்டெரிப்பது போல் இருந்தது. சிறிது நேரம் வரை அவர் மனம் பெருங் குழப்பத்தை யடைந்தது. மெல்லத் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். தணிந்த குரலில் "அம்மா! உன்னை இளமையிலிருந்து மாமாவும் நானும் உன் அம்மாவும் செங்கல்வராயனுக்கென்றே முடிவு செய்திருக்கின்ருேம். அவன் எல்லா வகையிலும் சிறந்தவன். அந்தக் குடும்பத்துக்கு ஏகபுத்திரன். ஏராளமான நில புலங்கள். பம்பு செட்டுக்கள். நெல் மலைபோல் குவிந்து வற்ருத

செல்வத்துடன் வாழ்கின்ற அந்த வீட்டில் நீ மகாலட்சுமிபோல் வாழ வேண்டும். நீ இதில் ஒன்றும் மறுப்பு பேசக்கூடாது. நீ போய் உன் பாடத்தைப் படி. உன் வாழ்வு சிறக்க வளஞ் சிறக்க நாங்கள் செய்வோம்'' என்ருர்.

சிவந்தி பளிச்சென்று தன் பாட புத்தகத்தை எடுத்துக்கொண்டு மேல் மாடிக்குச் சென்ருள். தன் அறையில் உட்கார்ந்து புத்தகத்தை விரித்தாள். அவள் உள்ளமும் உணர்வும் விரியவில்லை. அவைகள் கூம்பிவிட்டன. அவளுடைய மனதில் அனற்புயல் வீசியது. இந்தப் பெரும் பிரச்சினையை எப்படித் தீர்ப்பது?'' என்று எண்ணி எண்ணி ஏங்கினுள். தன் தந்தையார் மனம் உறுதியானது. அவரைப் பகைக்க வேண்டி வருகின்றது...இதற்கு முடிவு தெரியாது விழித்தாள்.

மறுநாள் வீரராகவ முதலியார் வந்து சேர்ந்தார். மங்களம்மா அண்ணனை அன்புடன் வரவேற்பு செய்தாள். இராஜோபசாரம் நடைபெற்றது. கல்யாணப் பேச்சு உரையாடல் நடந்தது. ''ஆவணி மாதம் 17-ம் தேதி நல்ல நாள். அன்றே முகூர்த்தம் வைத்து விடலாம் என்ருர் வீரராகவ முதலியார். களத்தூரிலேயே திருமணம் செய்வது என்று முடிவு செய்தார்கள். மங்களம்மாவுக்கு அண்ணன் மகனுக்குத் தன் செல்வப் புதல்வியைக் கொடுப்பதில் கொள்ளையாசை. ஏன்? புதல்வியின் எதிர்கால இனிய வாழ்வைப் பற்றி ஏதேதோ பகல் கனவு கண்டாள்.

பள்ளிக்குப் போன சிவந்தி வீட்டுக்குத் திரும்பி வரவில்லை. வீரராகவ முதலியார் களத்தூர் சென்ருர். திருமண வேலை மும்முரமாக நடந்தது.

மாலை கடற்கரையில் வழக்கம்போல இரு பறவைகளும் சந்தித்தன, வாடிய முகத்துடன் இருந்தாள் சிவந்தி.

சுகந்தன் ''சிவம்! என்ன ஒரு மாதிரியாக இருக்கின்ருய்? உடம்புக்கு என்ன? தலைவலியா?

''தலைவலியில்லை. உடம்புக்கு ஒன்றுமில்லை. உள்ளத்தில்தான் வலி. தாங்க முடியாத துயரம். என் தந்தை என்னை என் மாமன் மகனுக்குத் திருமணம் செய்து தருவதாக முடிவு செய்துள்ளார்கள், என் பிதா எதையும் தான் நினைத்தபடி முடிக்கும் உறுதியுள்ளவர். நானும் அப்படியேதான். அதே உறுதியுள்ளவள். நான் செய்த உறுதியை மாற்ற முடியாது. நம்மைப் படைத்த கடவுளே நினைத்தால்கூட நம்ம உறவைப் பிரிக்க முடியாது. ஆகவே இனி நாம் வேறு எங்காவது சேர்ந்து வாழ்வதுதான் உமக்கும் எனக்கும் நன்மை'' என்ருள். அவளுடைய சொல் அவனுக்கு அமுதம்போல் இருந்தது.

இருவரும் அன்றிரவே ரயில் ஏறி குற்ருலம் போனுர்கள். அங்கு இருவரும் மிகுந்த மகிழ்ச்சியுடன் உலாவுவதும் நீராடுவதும் உண்பதும் உறங்குவதுமாக இருந்தார்கள்.

செல்வப் புதல்வியைக் காணுது செல்வகேசவ முதலியார் பல இடங்களுக்குப் போன் செய்தார். ஒன்றும் புலன் தெரியவில்லை. இடிந்துவிட்டார்.

“பெண்ணே! நம் அருமைப் புதல்வியின் போக்கு எனக்கு ஒன்றும் புரியவில்லையே? எங்கு போயிருப்பாள். கல்யாணம் இப் போது வேண்டாம் என்ருளே? நாம் கல்யாண ஏற்பாடு செய்தது கண்டு உன்னையும் என்னையும் மறந்து துறந்து மாயமாய் மறைந்து விட்டாளே. அவள் இல்லாத வீடு சூன்யமாக இருக்கின்றதே? நான் என்ன என்னவோ எண்ணி இருந்தேனே? நம்மை நட்டாற்றில் தள்ளி விட்டாளே?...என்று கூறிக் கண்ணீர் சிந்திஞர்.

மங்களம்மாள் “இப்போது அழுது பயன் என்ன? நான் முதலி லேயே சொன்னேனே? என் பேச்சைக் கேட்டீர்களா? கல்லூரிக்கு அனுப்ப வேண்டாம். அவள் அதிகம் படித்து உத்யோகமா பார்க்கப் போகின்ருள்! இந்தக் காலத்தில் பிள்ளைகள் பெற்ருேருக்கு அடங்கு வதில்லை. படிப்பு மோசம். பழக்க வழக்கம் நாசம். அவளை அவள் இஷ்டத்திற்கு விட்டுவிட்டீர். முதலிலேயே கண்டித்தீரில்லை. அவள் போக்கு ஆரம்பத்திலிருந்தே எனக்குப் பிடிக்கவில்லை. அவள் படிக் கின்ற புத்தகம் ஒன்ருவது அறிவு வரக்கூடியதாக இல்லை. பெண்கள் படிக்க வேண்டிய புத்தகம் நளாயனி, அநசூயை, சாவித்திரி, சந்திர மதி, தமயந்தி, மங்கையர்க்கரசி, ஆண்டாள் என்று இருக்க வேண் டாமோ? அவள் படிக்கின்ற அறையில் போய் பாருங்கள். புத்தகங் களின் பேர் மூவர் காதல், காதலின் தோல்வி, கருகிய மொட்டு, அணைந்த விளக்கு, இடிந்த வீடு, உடைந்த வீணை, வழுக்கி விழுந் தவள், வாழத் தெரியாதவள், பிச்சைக்காரி, நொறுங்கிய சங்கு. முறிந்த உத்தரம் இப்படியான புத்தகங்கள் குவிந்திருக்கின்றன. இவைகளைப் படிக்கின்ற ஒரு பெண் உருப்படுவாளா? எனக் கென்னவோ அவளின் போக்கு ஆரம்பத்திலிருந்தே பிடிக்கவில்லை. நீங்கள் ஒரே பெண்ணென்று அளவுக்கு மேல் செல்லங் கொடுத்து விட்டீர். கேட்ட பொழுதெல்லாம் பணத்தை அள்ளி அள்ளித் தந்தீர் கள். அதன் விளைவுதான் இது” என்ருள்.

அவர்கட்கு மகள் இல்லாத நாள் ஒவ்வொன்றும் ஒரு யுகமாகக் கழிந்தது.

இந்தச் செய்தி வீரராகவ முதலியார் காதுக்கு எட்டியது. அவர் நீரயோசித்தார். முன்வைத்த காலை பின் வைக்கக்கூடாது. திருமண நாள் நிச்சயித்து விட்டோம். திருமணத்துக்கு உரிய சகல ஏற்பாடு களும் செய்து விட்டோம். இனி அதனை மாற்றுவது நம் குடிப் பெரு மைக்கு இழுக்கு என்று கருதிஞர்.

அதே தினத்தில் தன் மகனுக்குக் கல்யாணத்தை நடத்திஞர். பெண் காஞ்சிபுரத்தில் தேர்ந்து எடுத்தார். செங்கல்வராயன் தன் மனைவியுடன் தேன் நிலவுக்கு குற்ருலம் போனுன். அங்கே பார்க்கில்

ஒரு இளைஞன் மடியில் சிவந்தி படுத்திருப்பதைக் கண்டான். அவளுடைய கண்களுக்குப் படாமல் வேறு பக்கமாகச் சென்றான். சென்னையிலுள்ள தன் மாமனுக்கு ஒரு கடிதம் எழுதினான்:

''அன்புள்ள மாமா அவர்கள் அடிமலர்கட்கு வணக்கம். நலம். திருக்குற்றாலம் வந்தேன். இங்கே சிவந்தி ஒரு இளைஞனுடன் இருக்கும் பாவத்தைப் பார்த்தேன். தாங்கள் இனி அவளைப் பற்றிவருந்திப் பயன் இல்லை.''

இப்படிக்குப் பணிவுள்ள,

குற்றாலம் V. செங்கல்வராயன்.

இக்கடிதத்தைப் படித்தார் செல்வகேசவ முதலியார். அவருக்கு விண் சுழன்றது; மண் சுழன்றது; கண் சுழன்றது. அக்கடிதத்தை மனைவியிடம் காட்டினார். அவள் அதைப் படித்து மூர்ச்சையாகி விட்டாள். முதலியார் உண்ணாமலும் உறங்காமலும் பித்துப் பிடித்தவர் போல் மதிகலங்கிக் கதிகலங்கிக் கிடந்தார்.

செல்வகேச முதலியார் உள்ளத்தில் இறையருளால் ஒரு தெளிவு பிறந்தது. மனிதனுக்குத் துன்பம் ஆசாபாசத்தால் உண்டாகின்றது.

''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்''

என்பார் திருவள்ளுவர். பிறவிகள் தோறும் பல மனைவியர். பல மக்கள்; யாருக்காகக் கவலைப்படுவது? ஏ மனமே! நீ உனக்காகக் கவலைப்படாமல் பிறருக்காகக் கவலைப்படலாமா? சிவந்தி முற்பிறப்பில் யாருக்கு மகளாக இருந்தாளோ? இந்த உறவெல்லாம் சில காலந்தானே? அவளுக்காக நீ ஏன் வருந்துகின்றாய்? நீ பாலுந் தேனும் பழமும் அன்னமும் வேளை தவறாமல் கொடுத்து வளர்த்த உடம்பே பிரியப் போகின்றது; உனக்கு அன்னியமான மகள் பிரிவதில் என்ன ஆச்சர்யம்? ஆதலால் நடப்பதெல்லாம் ஈசன் செயல். இது நமது ஆன்மா உய்வதற்குச் சாதனமாக இருக்கக்கூடும்'' என்று சிந்தித்தார்.

தன் சொத்தில் 50 ஆயிரத்தை மட்டும் ஒதுக்கி வைத்தார். பங்களா மற்ற சொத்து அத்தனையும் அநாதை ஆச்சிரமத்துக்கு எழுதி வைத்தார். அவற்றைத் தக்கார் ஒருவரிடம் ஒப்புவித்துவிட்டு 50 ஆயிரம் பணத்துடன் புறப்பட்டு, வடக்கு நோக்கிச் சென்றார். வழியில் உள்ள திருத்தலங்களை யெல்லாந் தெரிசித்துக் கொண்டு அரித்வாரம் போனார். ரிஷிகேசம் சேர்ந்தார். அங்குள்ள ஒரு சாதுக்கள் மடத்தில் தன் ஆயுள் உள்ள வரை மனைவியுந்தானும் இருந்து உண்டு வாழ முதலீடாக 50 ஆயிரத்தை வழங்கி விட்டார். கங்கையில் நீராடி, நீறணிந்து ஐந்தெழுத்தை ஓதி உலகத்தை மறந்து தவநெறியில் நின்றார். மங்களம்மாவும் அவருடைய துறவற நெறியைப் பின்பற்றினாள்.

குற்ருலத்தில் சிவந்தி ஒவ்வொரு நகையாக விற்றுச் செலவழித்தாள். நகைகள் எல்லாம் காலியாகிவிட்டன. உண்ணவும் உடுக்கவும் திண்டாட்டமாயின. சுகந்தன் அங்கு வந்த ஒரு அழகிய லேடி டாக்டருடன் கம்பி நீட்டிவிட்டான்.

சிவந்தி படாத பாடுபட்டுச் சென்னை சேர்ந்தாள். தன் பங்களாவுக்குப் போனுள். அங்கே அம்மா அப்பா இல்லை. அது அநாதை ஆச்சிரமமாக மாறியிருந்தது. பிதா எங்கேயோ போய் விட்டதாக அறிந்து ஆருத்துயரமுற்ருள். காரில் சென்றவள் இப்போது பாரில் நடந்து சென்ருள். பணம் தண்ணீர் பட்ட பாடாக இருந்த அவளுக்குப் பணத்தைப் பார்ப்பது அருந்ததி நட்சத்திரமாக ஆயிற்று. அவள் வாழ்வு தாழ்வாகியது. அவளுடைய பழைய சிநேகிதைகளின் வீடுகளுக்குச் சென்ருள். இவளுடைய போக்குப் பிடிக்காத அவர்கள் இவளை வா என்றுகூடச் சொல்லவில்லை. ஒரு சொம்பு தண்ணீர்கூடத் தரவில்லை. வாடினுள். வருந்தினுள். பசியால் களைத்தாள். உடல் இளைத்தாள். உரு மாறியது.

தன் அறியாமையை நினைத்து நினைத்து நெஞ்சு புண்ணுயினுள். "ஆ! நமது பிதா நம்மிடம் எத்துணை அன்பைச் சொரிந்தார். எத்துணைச் செல்வமாக வளர்த்தார். நமது வாழ்வில் எத்துணை அக்கறை காட்டினுர். அந்த மகான் மனம் உடைந்து போகுமாறு நடந்து, ஒரு கயவனைத் தொடர்ந்து, மனம் போன போக்கில் சென்ற என்னைத் தெய்வம் மன்னிக்குமா? அவர் உள்ளம் என்ன பாடு பட்டதோ? என் பொருட்டு அவர் எல்லாந் துறந்து எங்கு சென்ருரோ? என்னைப் பேணி வளர்த்த அன்னை என்னமா வருந்திஞளோ? இப்படி என்னைப்போல் எத்தனை பெண்கள் இருக்கின்ருர்களோ? வாழ்வையே பாழாக்கிக் கொண்டேன்'' என்று நினைந்து அழுதாள். இறைவனைத் தொழுதாள்.

ஒருவாறு தேறி களத்தூர் சென்ருள். அங்கே குறுநில மன்னனைப் போல் வாழ்கின்ற வீரராகவ முதலியார் வீட்டுக்குச் சென்ருள். அவளை அவர் முதலில் அடையாளந் தெரிந்து கொள்ளவில்லை. பின்னர் தெரிந்து கொண்டார்.

"யார் சிவந்தியா? என்ன இந்த அவல நிலையடைந்திருக்கின்ருய்? எங்கு சென்ருய்?'' என்று கேட்டார். அவள் ஒன்றும் விடைகூருது கண்ணீர் வடித்து நின்ருள்.

செங்கல்வராயனும் அவன் மனைவியும் இந்திரனைப் போலவும், இந்திராணியைப் போலவும் உலாவுவதைப் பார்த்தாள். "இந்த வீட்டில் நான் ராணியாக வாழ வேண்டியவள். கெடு மதியால் கெட்டேன்'' என்று எண்ணினுள்.

செங்கல்வராயன், "சிவந்தி! நீ ஏன் அழுகின்ருய். பெற்ற தாய் தந்தையரை நீ அவமதித்தாய். வினை விதைப்பவன் வினையறுப்பான். தினை விதைத்தவன் தினையறுப்பான். கவலைப்படாதே. நான் நடாத்தும் பள்ளியில் ஆசிரியையாகப் பணி செய்து, இந்த வீட்டில் ஆகாரம் செய்து கொண்டு இனியாவது ஒழுக்க நெறியில் நில்'' என்று ஆதரவாகச் சொன்னுன்.

சிவந்தி அதற்கு இசைந்து செங்கல்வராயன் நடாத்தும் பள்ளியில் ஆசிரியையாக அமர்ந்தாள். ஏதோ உடலையே நம்பி உவகையின்றி உயிரற்ற உடம்புபோல் இருந்தாள்.

உ

முருகா

# மகாபாரதம்

## சாந்தி பருவம்

(96-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### மோக்ஷ தர்மம்

தருமபுத்திரர் பீஷ்மரைப் பார்த்து, "பிதாமகரே! சிறந்த ராஜ தர்மத்தையும் உத்தமமான ஆபத் தர்மத்தையும் தெளிவாக எமக்கு உபதேசித்தீர். இனி முக்கியமானதும், சத்தியமான பயனைத் தருவது மான மோக்ஷ தர்மத்தைச் சொல்லியருளும். ஒருவன் தனது மனைவி மக்கள் மரணமடைந்தாலும், செல்வம் நஷ்டம் அடைந்தாலும் துயரமின்றி யிருக்கும் வழியை உபதேசிக்க வேண்டும்" என்று கேட்டார்.

பீஷ்மர், "யுதிஷ்டிர! இதுபற்றி ஸேனஜித்துக்கு ஒரு வேதியர் உபதேசித்த பிங்களோபாக்கியானத்தைக் கூறுகின்றேன். கேள்".

ஸேனஜித் என்ற அரசன் ஒரு சமயம் புதல்வனை யிழந்ததால், புத்திர சோகத்தால் மிகவும் வருந்தினன். கைகால்கள் அசைவற்று அறிவு மழுங்கினன். அவனைப் பார்த்து ஒரு அந்தணர் கூறுகின்றார்.

"அரசனே! நீ அறிவில்லாமல் ஏன் சோகமடைகின்றாய்? உன்னைப்பற்றிச் சோகமடையக்கூடிய நீ ஏன் மற்றொன்றைப்பற்றிச் சோகமடைகின்றாய்? பிறந்தவர் அனைவரும் ஒருநாள் இறக்கின்றவர்கள்தானே. நதியில் கட்டையும் கட்டையும் ஒன்று சேரும்; மறுபடியும் பிரியும். அதுபோல் ஒருவனுக்கும் மற்றொருவனுக்கும் சேர்க்கையும் பிரிவும் உண்டாகின்றன. துக்கத்திலிருந்து சுகம் உண்டாகின்றது. சுகத்திலிருந்து துக்கம் உண்டாகின்றது. சுகமும் துக்கமும் சேர்ந்துதான் இருக்கின்றன. நீருள்ள இடத்தில் சேறும் இருக்கும். மலருள்ள செடியில் முள்ளும் இருக்கின்றது. சுகமும் துக்கமும் மாறி மாறி வருகின்றன. இன்ப துன்பங்கட்கு உடம்பு இருப்பிடமாயுள்ளது. இத் தூல உடம்புடன் சூக்கும சரீரமும் சேர்ந்துள்ளது. தேரின் உருளை சுற்றுவதுபோல் பிறப்பும் இறப்பும் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருகின்றன. அறிவுடையவர்கள் இன்பம் வந்தபோது மகிழ மாட்டார்கள். துன்பம் வந்தபோது வருந்த மாட்டார்கள். இன்ப துன்பங்களுக்கு முன் செய்த நல்வினை தீவினைதான் காரணங்கள். பகைவன் துன்பத்தைச் செய்ய வல்லவனல்லன்; அதுபோல் நண்பனும் இன்பத்தைச் செய்ய வல்லவனல்லன். அறிவு செல்வத்தைத் தரமாட்டாது; அறிவின்மை வறுமையைத் தரமாட்டாது.

செல்வத்துக்கும் வறுமைக்கும் முன் செய்த புண்ணிய பாவமே காரணங்களாகும். மூடன் பணக்காரனுகவும், அறிவாளி வறியவனுக வும் இருக்க நாம் பார்க்கின்றோம். ஆதலால் மரணமடைந்தவர்கட் காக வருந்துவது அறிவுடைமையாகாது. நீயும் மரணமடையப் போகின்றுய் ஆசையும் பற்றும் துன்பத்தைத் தருகின்றன. ஆசை யற்றவன் சுகப்படுகின்றுன்.

## பிங்களை

பிங்களை என்ற வேசி தன் ஆசை நாயகனிடமிருந்து விலக்கப்பட் டாள். அவள் தன் அறிவின் திறத்தால் தெளிவு பெற்று துயரத்தி லிருந்து மீண்டாள். என் உயிருக்கு நாயகனுன இறைவனை நான் காதலிக்கின்றேன்: அக் காதலன் ஒருபோதும் என்னைக் கைவிட மாட் டான். அவனையறியாது இத்தனை காலம் கெட்டேன். உலகில் உள்ள வர்களை இனியான் விரும்பேன். எப்போதும் என் ஆன்மநாயகனுன இறைவனை நினைப்பேன். இப்போது எனக்கு ஆசையில்லை புலன்களை வென்று நலன்களையடைந்தேன் என்றுள். அதுபோல் நீயும் துன்பத்தி லிருந்து விலகுவாய்'' என்று கூறினுர். ஸேனசித்து துன்பத்தை விடுத்து இன்பத்தை யடைந்தான்.

## தந்தையும் மைந்தனும்

தருமநந்தனர், ''பிதாமகரே! காலம் வேகமாகச் செல்லு கின்றது. அது எல்லாவற்றையும் அழிக்கின்றது. மனிதன் எதனை எப்படிச் செய்து உயர்வு பெறுதல் வேண்டும்?'' என்று கேட்டார்.

காங்கேயர், ''பார்த்தா! இதுபற்றி ஒரு தந்தைக்கும் மைந் தனுக்கும் நடந்த உரையாடலைக் கூறுகின்றேன். கேள்.

ஒரு வேதியருக்கு மேதாவி என்ற மகன் இருந்தான். அவன் தந்தையைப் பார்த்து, ''பிதாவே! ஆயுள் விரைந்து நாசமடை கின்றது. நான் எப்படி நடக்க வேண்டும்?'' என்று வினவினுன்.

தந்தை. ''மகனே! பிரம்மசர்யத்தைக் கடைப்பிடித்து வேதங் களை ஓதவேண்டும். வேதம் ஓதியபின் இல்லறத்தை மேற்கொள்ள வேண்டும். பிறகு வானப்பிரஸ்த தருமத்தையடைய வேண்டும்'' என்றுர்.

மைந்தன், ''தந்தையே! பொழுது விடிந்துவிட்டது. பொழுது போனுல் ஆயுளில் ஒருநாள் கழிந்து விட்டது. இரவு பகல் என்ற வாளினுல் காலன் நம் ஆயுளை அறுத்துக்கொண்டேயிருக்கின்றுன். வாழ்ந்து கொண்டிருக்கும் போதே மரணம் திடுமென வரும். ஆத லால் காலத்தைக் கடத்தக்கூடாது. நாளை செய்யவேண்டியதை இன்றே செய்ய வேண்டும். மாலை செய்ய வேண்டியதைக் காலையி

லேயே செய்ய வேண்டும். மரணம் எப்போது வரும் என்பதை அறிந்தவன் ஒருவனுமில்லை. தூங்கிக்கொண்டிருக்கும் மாட்டைப் புலி எடுத்துக்கொண்டு போவதுபோல் உயிரை இயமன் கொண்டுபோய் விடுகின்றான். கோடீச்சுரனையும் கோவணாண்டியையும், சூரனையும், பண்டிதனையும், இளைஞனையும் இயமன் கவர்கின்றான். உயிர்கள் ஆசையால் கட்டுண்டிருக்கின்றன, ஆசையாகிய கயிற்றையறுத்து சத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். நான் ஆசைக்கு ஆளாகாமல் மெய்ஞ்ஞானத்தால் பிரம்மத்தையடைவேன். மனிதனுக்கு ஞானந்தான் நேத்திரம். அப்பா! உனக்கு ஏன் இன்னும் ஆசை விடவில்லை? உன் தந்தை எங்கே? தந்தைக்குத் தந்தை யெங்கே? அவர்கள் மறைந்ததுபோல் நீயும் மறைந்து விடுவாய். அவ்வாறு மறைவதற்கு முன் குறைவற்ற ஞான சாதனத்தால் பரம்பொருளை அடைவாயாக'' என்று கூறினான். இதனைக் கேட்ட தந்தை ஞான வழியில் சென்று பரம்பொருளையடைந்தார். அதுபோல் சத்திய ஞான சாதனத்தால் பரம்பொருளையடைவாயாக'' என்றார்.

தருமர், ''அறிஞர் பெருமானே! சுகத்துக்குக் காரணம் செல்வமும், துக்கத்துக்குக் காரணம் செல்வமும் என்கின்றீர்களே? இந்த உண்மையை உரைத்தருள்க'' என்று கேட்டார்.

பீஷ்மர் கூறுவார். முன்னொரு காலத்தில் சம்யாகர் என்ற முனிவர் என்னை நோக்கிக் கூறினார்.

## சம்யாகர் கூறியது வறுமையால் இன்பமும், செல்வத்தால் துன்பமும் வரும்

''இந்த உலகில் மனிதர்கட்குப் பிறந்தது முதல் இன்பதுன்பங்கள் நதியின் ஓட்டம்போல் இடையறாது வந்துகொண்டுதான் இருக்கும். சுகதுக்கத்தைச் சமமாகப் பார்க்கின்றவன்தான் ஞானி. உலகம் செல்வத்தால் சுகமும், வறுமையால் துக்கமும் ஏற்படுகின்றன என்று மாறுபட்டு எண்ணுகின்றது. உண்மை இது அன்று.

வறியவன் சுகமே தூங்குவான். அவனுக்குப் பகையும் இருக்காது. அவனைக் கண்டு மற்றவர்கள் பொறாமையடையமாட்டார்கள். பீஷ்மா! ஏழைக்கு நிகரானவன் உலகில் எவனும் இல்லை. இந்த அரச பதவியையும் வறுமைத்தனத்தையும் துலாக்கோலில் நான் நிறுத்துப் பார்த்தேன். ஏழ்மைதான் கனமாக இருந்தது.

செல்வம் படைத்தவனுக்கு எப்போதும் அச்சம் இருந்து கொண்டேயிருக்கும். செல்வத்தைத் தேடும்போதும் துன்பம்; அதனைக் காப்பாற்றும் போதும் துன்பம்: செலவழிக்கும் போதும் துன்பம். பெரிய செல்வத்தை விட்டு இறந்து விடுவோமே என்றும் துன்பம்.

வறியவனுக்குத் திருடர்களால் துன்பம் உண்டாகாது. அரசாங்கத்தாரால் துன்பம் உண்டாகாது. உறவினரால் துயரம் விளையாது. பாய் விரிக்காத வெறுந்தரையில் கையைத் தலையணையாக வைத்துப் படுப்பவன் சுகமே உறங்குவான். அவன் மனதில் ஆறுதல் இருக்கும்.

பெருஞ்செல்வம் படைத்தவன் வெளிப்பார்வைக்குச் சுகிபோல் இருப்பான். அவன் மனதில் ஒரு கோடி துக்கம் நிறைந்திருக்கும். பேராசை, கோபம் முதலிய தீய குணங்கள் அவன்பால் வந்து சுகமே தங்கும். பணம் படைத்தவன் அகங்காரத்தால் முகத்தைச் சுருக்கிக் கொள்வான். பிறரிடம் பேசும்போது சிரிக்க மாட்டான். மற்றவர்களுடன் கலகலப்பாகப் பேச மாட்டான். நம்மை யாராவது பணம் கேட்டுவிடுவார்களோ? என்று எப்போதும் அச்சப்பட்டுக்கொண்டேயிருப்பான். பொருளை விட்டவன்தான் சுகப்படுகின்றான். பெரும் பொருள் படைத்தவன் துக்கப்படுகின்றான். ஆதலால் வறுமையை ஞானிகள் வரவேற்கின்றார்கள். பொருளைப் பொருளாக மதிக்க மாட்டார்கள். எனவே நீ சுகப்பட வேண்டுமானால் செல்வத்தைச் "செல்" என்று கூறி இன்பத்தையடைவாய் என்று எனக்கு உபதேசித்தார்'' என்று உரைத்தார்.

தருமர், "ஞான வீரரே! பேராசையால் விழுங்கப்பட்ட மனிதன் பல தொழில்களைச் செய்தும் பொருளையடையாமற் போவானாகில் எதைச் செய்து சுகமடையக்கூடும்?'' என்று கேட்டார்.

## ஒழிவுதான் சுகத்தையளிக்கும்

"ஏ கௌந்தேய! எல்லாவற்றிலும் சமமான புத்தியும், சோர்வின்மையும், உண்மையுரையும், உறுதியும், காரியத்தில் விருப்பம் இல்லாமையும் என்ற இந்த ஐந்தும் எவனிடம் இருக்கின்றனவோ அவன் சுகத்தையடைவான் இவை மோட்ச சாதனங்களாகும்.

இதுபற்றி மங்கி என்ற முனிவரது கதையைக் கேள். பொருளில் விருப்பமுள்ள மங்கியென்ற முனிவர் பல முறை பல தொழில்கள் செய்தும் பயன் அடைந்தாரில்லை. இரண்டு இளம் எருதுகளை வாங்கினார். பழக்குவதற்காக நுகத்தடியில் வைத்து ஓட்டினார். அந்த இரு காளைக் கன்றுகளும் ஓடின. படுத்திருக்கும் ஒட்டகத்தைக் கடக்க ஓடின. ஒட்டகம் கோபத்துடன் எழுந்து ஓடியது. கன்றுகள் அதன் பிடரியில் சிக்கித் தவித்தன. ஒட்டகம் காட்டில் சென்று விட்டது. இதனைக் கண்ட மங்கியென்பவர் கூறுவாராயினர்.

சமர்த்தனான மனிதன் முயற்சியுடன் அயர்ச்சியின்றி நன்கு தொழிலைச் செய்தாலும், விதி கூட்டி வைக்கவில்லையானால் கைகூடாது. என் அருமையான கன்றுகள் காகதாள நியாயம் போல்

ஒட்டகத்தால் தூக்கிச் செல்லப்பட்டு ஒழிந்தன. இதற்கு வேறு என்ன நியாயம் இருக்க முடியும்? விதிதான் காரணம். ஆதலால் சுகத்தையடைய விரும்புபவன் ஒழிவையடைய வேண்டும். ஜனகருடைய வீட்டைவிட்டு வெளிப்பட்ட சுகமுனிவர், ''எல்லாவற்றையும் விட்டவனே சுகப்படுவான்'' என்று கூறினார்.

''ஏ மனமே! நீ ஒழிவையடைவாயாக. சும்மா விடு. விருப்பங்களிலிருந்து விலகு. ஏ மனமே! என்னை நீ விளையாட்டுப் பொம்மையாக வைத்து ஆட்டுகின்றாய். இனி நான் உனக்கு அடிமையாக மாட்டேன். விழித்துக் கொண்டேன்: ஏ காமமே! உன்னை விட்டு விலகுகின்றேன். காமமே! உனக்கு விருப்பமானதை நான் சதா தேடியலைந்தேன். என் ஆன்மாவுக்கு உறுதியைத் தேடினேனில்லை. காமமே! நீ சதா பொருளையே விரும்புகின்றாய். அடைந்த பொருளில் திருப்தியடைவதுமில்லை. மகிழ்ச்சியடைவதுமில்லை. காமமாகிய உன்னைவிட்டு நான் இப்போது விலகி விட்டேன். நான் இனி பிரம்ம விசாரம் செய்து மனதைப் பரம்பொருளுடன் இணைத்து இன்புறுவேன். பொருள்களைத் தொட்டவன் துக்கப்படுகின்றான்; விட்டவன் சுகப்படுகின்றான். நான் தொழில்களிலிருந்து ஒழிவையடைந்தேன். இனி எனக்குத் துன்பம் இல்லை. இன்பம் உண்டு,'' என்றனர். அந்தக் கன்றுக்குட்டிகளால் அவருக்கு ஞானம் உண்டாயிற்று ஒன்று மனம்; மற்றொன்று காமம் என்று அறிவாயாக.

இப்படியே மிதிலைக்கு அரசரான ஜனகரும் கூறியிருக்கின்றார். மிதிலை நகரம் எரிக்கப்பட்டாலும் என்னுடையது ஒன்றும் எரிக்கப் படவில்லை'' என்றார்.

நகுஷ குமாரனை யயாதி போத்யர் என்ற முனிவரைப் பார்த்து, ''நீர் எவ்வாறு சாந்தியடைந்து எப்போதும் மலர்ந்த முகத்துடன் உலாவுகின்றீர்?'' என்று கேட்டான்.

போத்யர், ''நகுஷ குமாரனே! நான் ஒருவருக்கும் உபதேசிப்பதில்லை. எனினும் கூறுகின்றேன். நீ தெரிந்து கொள்.

பிங்களையென்ற வேசி, அணில், பாம்பு, வண்டு, குறியடிப்பவன், இளம்பெண் என்ற அறுவரும் எனக்கு குருமார்கள்.

பிங்களை யென்பவள் ஆசையையறுத்து சுகப்பட்டாள். அணில் ஒரு இறைச்சித் துண்டை வாயில் வைத்திருந்ததால் அதனை மற்ற பிராணிகள் துரத்தி இடர்ப்படுத்தின. இறைச்சியை எறிந்தவுடன் அது சுகப்பட்டது.

பாம்பு தனக்கென்று ஒரு இடத்தை வகுத்துக் கொள்ளாமல் கறையான் புற்றில் சுகப்படுகின்றது.

தேன்வண்டு மலர்களிலிருந்துச் சிறிது சிறிதாகத் தேன் எடுத்து சுகப்படுகின்றது. அதுபோல் அறிஞன் பல நூல்களிலிருந்து சாரத்தை யெடுத்து உய்வு பெற வேண்டும்.

குறியடிக்கின்றவன் தன் அருகில் வருகின்ற அரசனையும் அறிவதில்லை. அதுபோல் பரம்பொருளை நாடி உலகத்தையறியாமல் இருக்க வேண்டும்.

இளம்பெண் குடும்பத்தில் இருப்பவருக்கு அறியாமல் அதிதிக்கு உணவு தயாரிக்கின்றபோது வளையல்கள் பல இருந்தால் ஓசை வரும் என்று ஒரே வளையலை மட்டும் தரித்தாள். அதுபோல் பலருடன் கூடினால் கலகம் வரும். தனிமையில் இனிமையுண்டு. இந்த ஆறு பேரும் குருமார்களாகி என் அறிவை வளர்த்தார்கள்'' என்று கூறினர். ஆதலால் மோட்சசாதனம் ஒழிவுதான்'' என்று கூறினர்.

## பிரஹ்லாதரும் அஜகரரும்

தருமர், ''அறிவின் சிகரமே! மனிதன் எதனால் சுகம் அடைகின்றான்? எதனால் உத்தம கதியையடைகின்றான்?'' என்று கேட்டார்.

''தருமனே! இதுபற்றி பிரஹ்லாதருக்கும் அஜகர விருத்தியிலுள்ள முனிவருக்கும் நடந்த வரலாற்றைக் கூறுவேன். கவனமாகக் கேள்.

அறிவிற் சிறந்த பிரஹ்லாதர் ஒரு சமயம் ஒரு முனிவரைச் சந்திந்தார். அம்முனிவர் சிறு குழந்தைபோல் ஒரு சிறு கவலையும் இன்றி மலர்ந்த முகத்துடன் விளங்கிக் கொண்டிருந்தார். பிரஹ்லாதர், ''ஏ முனிவரே! நீர் சிறு குழந்தைபோல் கவலையின்றியிருக்கின்றீர். நீர் ஒரு முயற்சியிலும் ஈடுபடவில்லை. அயர்ச்சியின்றி உள்ளம் உயர்ச்சியுடன் காட்சி தருகின்றீர். உம்முடைய நடை எது? அறிவு எது?'' என்று கேட்டார்.

அம்முனிவரர் கூறுகின்றார். 'பிரஹ்லாத! நீ இந்த உலகத்தை உற்றுப்பார். சேர்ந்தவர் பிரிகின்றார். பிரிந்தவர் சேர்கின்றார். பிறந்தவன் இறக்கின்றான். இறந்தவன் பிறக்கின்றான். பருத்தவன் சிறுக்கின்றான். சிறுத்தவன் பருக்கின்றான். உண்டவையத்தனையும் மலமாகின்றன. நான் விருப்பு வெறுப்பு என்ற இரண்டையும் விட்டவன். மலைப்பாம்பு (அஜகரம்) உணவுக்கு என்று நகர்ந்து போவதில்லை. யதேச்சையாகத் தன்பால் வந்ததனை மட்டும் உண்ணும். இல்லையேல் பட்டினியாக இருக்கும். நான் இந்த அஜகர விருத்தியை மேற்கொண்டவன். தானே என்பால் வந்த உணவை மட்டும் சுவை பாராது உண்ணுகின்றேன். தரையிலும் படுப்பேன்; கட்டிலிலும்

படுப்பேன். பஞ்சணையிலும் படுப்பேன். பாறையிலும் படுப்பேன். இரண்டும் எனக்கு ஒன்றுதான். பால் அடிசிலும் உண்பேன்; உப்பில்லாத கஞ்சியையும் உண்பேன். இவைகளில் எனக்கு விருப்பு வெறுப்பு ஏற்படுவதில்லை. நான் அஜகர விரதத்துடன் சஞ்சலமின்றி பரம சுகத்துடன் உலாவுகின்றேன். இது வேண்டும் அது வேண்டும் என்று நாடுவதில்லை. அஜகரம் என்ற மலைப்பாம்பினிடம் இந்த அறிவை நான் பெற்றேன். எதிலும் எனக்குப் பற்று இல்லை. 1. ஆசையும் 2. பற்றும் அற்றவன் சுகப்படுகின்றான். அஜகரவிரதம் உள்ளவன் சுகப்படுவான்'' என்று கூறினார்.

## நரியின் அறிவுரை

பீஷ்மரைப் பார்த்து தருமர் கேட்டார். ''அஜகர விரதமுடையவனுக்கு எது முக்கியம்?''

பீஷ்மர், அறிவுதான் முக்கியம். அறிவுதான் மோட்ச காரணமாகின்றது. இதைப்பற்றி அடியிற்கண்ட வரலாற்றை அறிந்து கொள்.

செல்வமும் செருக்கும் உடைய ஒரு வைசியன் தவமும் விரதமும் உடைய காசிபன் என்ற முனி குமாரனைத் தேரில் கீழே விழும்படிச் செய்தான். தேரில் அகப்பட்டுக் கீழே விழுந்த காசிபன் துன்பமுற்றான். சினங் கொண்டான். பொருள் இல்லாதவனுக்கு உலகில் வாழ்க்கையில்லை. இனி நான் உயிருடன் வாழ்வதில் என்ன பயன்? மாண்டு போவேன்'' என்று கூறி மரணத்தை விரும்பி நிலத்தில் கிடந்தான்.

அங்கே ஒரு நரி வந்தது. காசிபனைப் பார்த்துக் கூறத் தொடங்கிற்று. ''ஏ வேதியனே! பிறப்புக்களில் மனிதப் பிறவி சிறந்தது. அதில் அந்தணனாகப் பிறப்பது சிறந்தது. நீ மனிதப் பிறவியில் அந்தணனாகப் பிறந்திருக்கின்றாய். பிறந்தது மட்டுமின்றி வேதங்களை ஓதியுணர்ந்திருக்கின்றாய். இத்தகைய நீ இறக்கத் துணிவது அறிவுடைமையாகாது. நீ சிந்தனை செய்து பார். கைகளையுடைய பிறப்பு உயர்ந்தது. என்னைப்பார். எனக்குக் கையில்லை. நாங்கள் காலில் தைத்த முள்ளை எடுக்க முடியாமல் துன்பத்தையடைகின்றோம். கடிக்கும் கொசு முதலியவற்றை ஓட்ட முடியாது அவதிப்படுகின்றோம். மூக்கில் ஒழுகும் சளியைச் சிந்த முடியாமல் சிந்தனையடைகின்றோம். உடம்பில் உண்டாகின்ற தினவை மாற்றிக்கொள்ள மாட்டாது வருந்துகின்றோம். கையுள்ளவர்கள் கண்ணில் விழுந்த தூசுகளையகற்ற முடிகின்றது. கையில்லாத நாங்கள் கண்களில் விழுந்த தூசு

---

1. ஆசை—பிறர் பொருளில் வைக்கும் விருப்பம்.
2. பற்று—தன் பொருளில் வைக்கும் விருப்பம்.

களை யகற்ற முடியாது அல்லல்படுகின்றோம். கையால் மனிதர்கள் ஆடுமாடுகளை யடக்கிப் பால் கறந்து உண்ணுகின்றார்கள். எருது களால் நிலத்தை உழுது உண்ணுகின்றார்கள். காற்று மழை வெயிலைக் கையால் தடுத்துக் கொள்ளுகின்றார்கள். துணி நெய்து உடம்பைக் குளிராது மறைத்துக் கொள்ளுகின்றார்கள். நாங்கள் கையின்றிக் கவலைப்படுகின்றோம். காசிபனே! நீ புழுவாய் பாம்பாய் பறவையாய் நரியாய்ப் பிறக்காமல் மனிதனாகப் பிறந்திருக்கின்றாய். நான் நரியாய்ப் பிறந்து நலிகின்றேன். நீ ஏன் செல்வ வந்தனைக் கண்டு கவல்கின்றாய்?

அரசனாக இருப்பவனும் சக்கிரவர்த்தியாகவே ஆசைப்படு கின்றான். தேவனாகப் பிறந்தவன் தேவேந்திரனாக விரும்புகின்றான். கட்டைகளால் அக்கினி திருப்தியடைவதில்லை. தாகங் கொண்டவன் தண்ணீரால் விடாய் தணிவதில்லை. ஆகவே நீ திருப்தியடைய வேண்டும். உன்னைவிடத் தாழ்ந்தவர்களைக் கண்டு நீ மகிழ வேண் டாமா? ஆதலால் கடவுள் கொடுத்த இந்தப் பிறவியைக் கொண்டு நீ முத்தி நெறியில் சென்று பரம்பொருளையடைவதுதான் முறை. நீ மாண்டு போக நினைப்பது மதியுடைமையாகாது” என்று கூறியது. இதனைக் கேட்ட காசிபன் எழுந்து நரியை உற்றுப் பார்த்தான் அது நரியன்று என்பதை அறிவுக்கண்ணால் அறிந்தான். சதக்ருது என்ற இந்திரனே நரி வடிவில் வந்து தனக்கு உபதேசித்தான் என்பதை யறிந்தான். நரி வடிவாக வந்த இந்திரனுக்கு வணக்கம் செலுத்தி விட்டுத் தன் வீடு சென்றான்.

(தொடரும்)

## எமது வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. 6—00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | ரூ. 3—00 |
| 3. | திருப்புகழ்த்திரட்டு | ரூ. 1—00 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற் படைவீடு திருப்பரங்குன்றம் பாடல்களும்) | ரூ. 2—50 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | ரூ. 5—00 |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்ருவது தொகுதி (மூன்ருவது படைவீடு—பழநி) | ரூ. 5—00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலே) | ரூ. 2—50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி முதற்பாகம் குன்றுதோருடல் | ரூ. 5—00 |
| 9. | மகாபாரதம் வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | அச்சில் |
| 10. | கந்தரநுபூதி (விரிவுரையுடன்) | ரூ. 2—00 |
| 11. | அறிவுரையமுது | ரூ. 0—50 |
| 12. | திருவாசகத்தேன் | ரூ. 0—50 |
| 13. | செந்தமிழ் இன்பம் | அச்சில் |
| 14. | சிந்தனைத்தேன் | ரூ. 0—50 |
| 15. | கிழவியும் குழவியும் | ரூ. 0—50 |
| 16. | அபிராமி | ரூ. 1—00 |
| 17. | அநசூயை | ரூ. 1—00 |